




உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்



# சண்டேஸ்வர நாயனர் சரித்திரம்

## பசுக்களின் திரு அவதாரம்,

## சிவ பூஜை,

## சேக்கிழார் பெரிய புரான திருவாக்கு.





தியாகராஜன கம்பெனி,
...மிழ் திருமறைக் கழகம்,
...ம்பு செட்டி தெரு, சென்னை.



விலை அணு 1.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்



சிவலிங்கம்



சண்டேஸ்வரர்



பசு

53-3

உ

சிவமயம்

# சண்டேஸ்வர நாயனர் சரித்திரம்



சோழவள நாட்டில் திருச்சேய்ஞலூரில் பிராம்மண குலத்தில் காசிபகோத்திரத்தில், எச்சதத்தன் என்பவரின் மனைவியாராகிய பவித்திரையின் திரு வயிற்றில் விசாரசருமர் என்பவர் திருவவதாரம் செய்தார். அவருக்கு 5 வயதிலே வேதங்களையும் சைவாகமங்களையும் பூர்வ ஜன்மத்து அறிவுத் தொடர்ச்சியினுல் இச்சன்மத்தில் அறியும் அறிவு உண்டாயிற்று. அவருக்கு ஏழு வயதிலே உபநயனச் சடங்கு செய்யப்பட்டது. அவர் வேதநூலின் உண்மையைத் தாமே அறிந்து கொள்ளும் அறிவின் திறத்தைக் கண்டு ஆச்சரியமடைந்தார்கள். அவர் சிவபிரானும் சிவ சத்தியுமே தமக்குப் பரம பிதா மாதாக்கள் என்பதை உணர்ந்து அவரிடத்திலே தாம் அன்பு செய்ய வேண்டும் என்றும் இம்மானிட ஜன்மமே கருவியாகச் சிறந்துள்ளது என்றும் கருதி திருவருளையே முன்னிட்டுச் செய்ய வேண்டும் என்ற வேதாகமம் முதலிய நூல்களின் தெளிவு தனக்குத் தோன்ற அவர் சிவபிரானிடத்து வைத்த மெய்யன்பே வளர்பிறை போல் வளர்ந்து வந்தது.

ஓர் நாள் அத்தியயனம் செய்யப் பிள்ளைகளோடு அவர்போகும் வழியில் பசு நிரைகளைக் கண்டார். அங்கு ஓர் ஈற்றுப்பசு தன்னை மேய்ப்பாஞகிய இடையனைக் குத்த வந்ததைக்கண்டு அவ்விடையன் அப் பசுவைப் பாவத்துக் கஞ்சாமல் கோலினுல் அடித்தான். அதைப் பார்த்த நமது விசாரசருமர் அதிக கோபம் கொண்டு பசுவை அடியாதபடி தடுத்து பசுக்கள் சிவ லோகத்தினின்றும் பூமியில் வந்த வரலாற்றினையும் அவைகளின் உறுப்புக்களில் தேவர்களும் முனிவர்களும் தீர்த்தங்களும் இருப்பதையும் அவை தரும் பஞ்ச கவ்வியங்கள் சிவபிரானுக்கு அபிஷேக திரவியம் ஆதலையும் சிவ சின்னமாகிய விபூதிக்கு மூலம் அவற்றின் சாணம் ஆதலையும் நினைந்து, அப் பசுக்கூட்டத்தைத் தாமே மேய்க்க விரும்பி இடையனை நோக்கி, "இப்பசுக் கூட்டத்தை நானே இனி மேய்ப்பேன்", என்றார். இடையனும் பயந்து சென்றுன்.

விசாரசருமர் பசுக்களை அவற்றிற்குரிய சொந்தக்காரரின் சம்மதிபெற்று நாள்தோறும் மண்ணியாற்றங்கரையில் இருக்கின்ற

வயல்களிலும் மற்றும் புல் நிறைந்திருக்கும் இடங்களிலும் கொண்டுபோய் நன்ருக மேயவிட்டு தண்ணீர் ஊட்டி வெய்யிற் பொழுதில் நிழல் இருக்கும் இடத்தில் செலுத்தி நன்ருகக் காப்பாற்றி சமித்துகள் ஒடித்துக்கொண்டு மாலைப்பொழுதில் அஸ்தமிக்கும் முன் பசுக்களை அவர் அவர் வீட்டிற்கு ஓட்டிக்கொண்டு போய் விட்டு தம் வீட்டிற்குப்போவதுமாக நாட்களைக் கழித்தார்.

இவர் பசுக்களை மெய்யன்போடு மேய்த்து வருவதால் பசுக்களும் சௌந்தர்யமாக மிகப்பெருகி மடி சுரந்து பாலை அதிகமாகப் பொழிந்தன. பிரஜைகளும் பசுக்கள் விசேஷமாகத் தரும் பாலைக் கறக்கக்கண்டு விசாரசருமரைப் புகழ்ந்தார்கள். பசுக்கள் வீட்டிலே உள்ள தங்கள் கன்றுகளைப் பிரிந்தாலும் சிறிதும் வருத்தம் இல்லாமல் அதிக அன்போடு தங்களை மேய்க்கிற விசாரசருமர் கொஞ்சநேரம் பிரிவாராகில் அப்பிரிவை சகியாமல் தாய்போல உருகி அவரிடத்திலே சென்று கனைத்து மடி சுரந்து ஒருவர் கறக்காமல் தாமே பால் பொழியும். இதைக் கண்ட விசாரசருமர் அப்பசும்பால் நமது பரம சிவனுக்குத் திருமஞ்சனமாகும் என்று நினைத்தார்.

சிவார்ச்சனை இடத்திலே பேராசை வந்தது. உடனே அவர் மண்ணியாற்றில் இருக்கின்ற ஓர் மணற்றிட்டிலே திரு ஆத்தி மரத்தின் கிழ் மணலினலே ஒரு சிவலிங்கத்தைக் குவித்தார். திருக்கோயிலும் கோபுரமும் மதிலும் வகுத்து திரு ஆத்திப் பூ முதலிய புஷ்பங்களும் பத்திரங்களும் பறித்து திருப்பூங்கூடையிலிட்டுக் கொண்டுவந்து வைத்துவிட்டுப் புதிய குடங்களோடு கறவைப் பசுக்கள் ஒவ்வொன்றினிடத்திலும் சென்று முலையைத் தீண்டினர். அவை கனைத்து பாலைப் பொழிந்தன. அவை பொழிந்த பாலை அக்குடங்களில் நிறைத்துக் கொண்டுபோய் தான் அமைத்த ஆலயத்திலே வைத்து பத்திர புஷ்பங்களால் சுவாமியை அர்ச்சித்து பாலினல் அபிஷேகம் செய்துகொண்டு வந்தார். சுவாமியும் அவ்விலிங்கத்தினின்றும் விசாரசருமர் அன்போடுசெய்யும் அர்ச்சனையைக் ஏற்றுக் கொண்டருளினர்.

விசாரசருமர் சிவ பூசைக்கு அங்கமாகிய திருமஞ்சனம் முதலிய பொருள்களுள் கிடையாதவைகளை மானசமாக கிடைத்தனவாகக் கொண்டு நிரைவு செய்து விதிப்படி அர்ச்சித்து வணங்கி வந்தார். அப்படி அபிஷேகத்துக்கு குடங்கள் நிறையப் பாலைச் சொரிந்தும் முன்போலவே குறைகள் தீர சொந்தக்காரருக்கும் பசுக்கள் பாலைக்கொடுத்து வந்தன.

நெடு நாளாக விசாரசருமர் செய்து வந்த விளையாட்டாகத் தோன்றிய சிவார்ச்சனையைக்கண்ட ஒருவன் உண்மையை அறி

யாது ஊரிலுள்ளவர்களுக்குத் தெரிவித்தான். அவர்கள் அதைச் சபையாருக்குத் தெரிவிக்க அவர்கள் விசாரசருமருடைய தகப்பனுராகிய எச்சதத்தனை அழைத்து உம்முடைய புதல்வன் அன்புடன் பசுக்களை மேய்ப்பதைப் போலபாவித்து பாலைக்கறந்து வீணுக மணலிலே சொறிந்து விளையாடுகிருன் என்று சொல்லக்கேட்ட எச்சதத்தன் திகைத்தான்.

தனது சிறு பிள்ளை செய்த குற்றத்தை அறிந்திலேன், தாங்கள் பொறுத்தருள வேண்டும் என்று பிரார்த்தித்து, இனி அக்குற்றத்தை தானே ஏற்றுக் கொள்வதாகச் சொல்லி விடை பெற்று சபையை விட்டு நீங்கினுன்.

மறுதினம் விசாரசருமருடைய செய்கைகளை நன்கு உணர வேண்டும் என்ற கருத்துடன் தனது குமாரன் பசுக்களை ஓட்டிப் போகும்போது அவன் அறியாதபடி பின் சென்ருன்.

விசாரசருமர் வழக்கம் போல் பசுக்களை நன்ருக மேய்த்து மண்ணியாற்றின் மணற்றிட்டிலே கொண்டு சென்றதைக் கண்டு எச்சதத்தன் பக்கத்திலிருந்த குரு மரத்தில் ஏறி ஒளித்து அங்கு நிகழப் போவதைக் கவனித்திருந்தான். விசாரசருமர் ஸ்நானம் செய்து வழக்கம் போல் திருக்கோயிலும் சிவலிங்கமும் செய்து பத்திர புஷ்பங்கள் பறித்துக்கொண்டு வந்து பிறகு பாற்குடங்கள் கொண்டு வந்து பசுக்களிடம் வழக்கம்போல் பால் பெற்று அருச்சனைக்கு வேண்டியவைகளை அமைத்து பூரண அன்பினேடு பூஜைக்கு ஆரம்பித்துச் சிவலிங்கத்திற்கு பத்திர புஷ்பங்கள் சாத்தி பாற்குடங்களை எடுத்து அபிஷேகம் செய்தார்.

மரத்திலிருந்த தகப்பனுகிய எச்சதத்தன் அதைக் கண்டு அதிக கோபத்துடன் இறங்கி தன் கையிலிருந்தக் கோலினல் தனது புதல்வராகிய விசாரசருமருடைய சிறு முதுகில் அடித்து கொடுஞ் சொற்களைச் சொன்னர். அது தனது புதல்வர்க்கு புலப்படாமையால் பலமுறை அடித்தும் விசாரசருமருடைய மனம் சிவ பூஜையிலே யிருந்தும் அவ்வடி தாங்காமலிருந்தும் அபிஷேகத் திருத்தொண்டினின்றும் தவருது இருந்தார். அவருடைய உண்மையை அறியாத தகப்பன் கோபித்து திருமஞ்சனப் பாற்குடத்தை காலினல் இடறித் தள்ளினர். உடனே குமாரர் அதைக்கண்டு அது செய்தவன் பிதாவும் பிராமணனும் குருவுமாகிய எச்சதத்தன் என்பதை அறிந்தும் அவனுடைய அதி பாதகமாகிய சிவாபராதமர்தலால் அவன் காலைத் துணிக்க நினைத்துத் தமக்கு முன் கிடந்த ஒரு கோலை எடுக்க அது மழுவாயிற்று. அதனுலே அவன் கால்களை வெட்டினர். சிவ பூஜைக்கு வந்த இடரை நீக்கினவராகி விசாரசருமர் முன்போல அருச்சனையைச் செய்ய ஆரம்பித்தார்.

சிவபெருமான் உமா தேவியாரோடும் இடபா ரூடராய்த் தோன்றி யருள அதைக் கண்டு மனங்களித்து விழுந்து நமஸ்கரித்தார். பரமசிவன் அவரை தம்முடையத் திருக்கரங்களினால் எடுத்து "நீ நம் பொருட்டு உன்னைப் பெற்ற பிதாவை வெட்டினாய் இனி உனக்கு நாமே பிதா" என்று அருள் செய்து அவரை அணைத்து அவருடைய திருமேனியைத் திருக்கரத்தினால் தடவி உச்சி மோந்தார். சிவபிரானுடைய திருக்கரத்தினாலே தீண்டப்பட்ட அவ்விசார சருமருடைய திருமேனி சிவமயமாகி திவ்விய பிரகாசத்தோடு தோன்றிற்று. பரமசிவன் அவரை நோக்கி "நாம் நம்முடைய தொண்டர்களுக்கெல்லாம் உன்னைத் தலைவனாக்கி நாம் ஏற்றுக் கொண்ட அமுதும் பரிவிட்டமும் புஷ்பமும் உனக்கே கிடைக்கும்படி சண்டேஸ்வர பதத்தைத் தந்தோம் என்று திருவாய் மலர்ந்து தம்முடைய சடையிலே தரித்திருக்கின்ற கொன்றை மாலையை எடுத்து அவருக்குச் சூட்டி அருளினார். அவ்விசாரசருமர் சகலரும் ஆரவாரிக்க எவ்விடத்திலும் புஷ்ப மழை பொழிய சிவகணங்கள் ஆடிப்பாடிக் களி கூற வொலி பெருக வாத்தியவொலி முழங்க சைவ சமயம் நிலை பெறும்படிப் பரமசிவனைக் கும்பிட்டு அவராலே அழைக்கப்பட்ட சண்டேஸ்வரர் என்னும் பதத்தை அடைந்தார்.

தனது தகப்பன் எச்சதத்தன் தன்னாலே தண்டிக்கப்பட்டமையால் அக்குறை நீங்கி சுற்றத்துடன் சிவலோகத்தை அடைந்தார்.

---

சிவாலயங்களில் நாம் பிரதக்ஷணம் செய்து முடிவில் சண்டேஸ்வரர் அனுக்கிரகம் பெற்று வருவதாக என்றும் வழங்கி வருகிறது. சிவனடியார்களும் தம்முடைய பூஜைகளை சிவபிரானிடத்தில் பதிந்த அன்புடன் சிவபூஜை செய்ய இந்நாயினார் நமக்கு வழிகாட்டியுள்ளார் என்பதை நன்குணர்ந்து கடைபடுமாறும் சிவானுக்கிரகத்தை பெரும் மார்க்கத்தைப் பெற இடைவிடாமல் தியானம் செய்வோற்குச் சிவனருள் எளிதில் கைகூடும் என்பதை நாம் காணும்படி இவர் காட்டியுள்ளார்.

**சுவாமி-சத்தகிரீசுரர், தேவியார்-சதி தேவியார்.**

சண்டேசுர நாயனார்-முக்தியடைந்த காலம்-தை மாதம் உத்திரம் - நட்சத்திரம் - இவரைவம்பராவரிவண்டுச் சருக்கத்தின் நான்காவது நாயன்மாராகிய **தண்டியடிகளுயனாரோடு** மயங்கற் பாலதன்று.

திருச்சிற்றம்பலம்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# பசுக்களின் திரு அவதாரம்

சிவலோகத்தில் சிவனது சன்னதியில் இடபம் இருக்கும் பக்கத்திலே நந்தை, பத்திரை, சுரபி, சுசீலை, சுமனை என்னும் ஐவகை பசுக்கள் இருக்கும். இவை முறையே, கபில நிறமும், கருநிறமும், வெண்நிறமும் புகை நிறமும் செந்நிறமும் உடையனவாம். இவ்வைந்தும் சிவனது, திரு அருளினாலே திருப்பாற்கடலில் இருந்து சிவ பூஜைகளின் பொருட்டும், பூமியில் உற்பவித்தன.

இப் பசுவின் உறுப்புகளிலே தேவர்களும் முனிவர்களும் தீர்த்தங்களும் இருக்குமாறு வேதங்கள் கூறுகின்றன. பிரம்மாவும், விஷ்ணுவும் கொம்பின் அடியில் இருப்பர். கோதாவரி முதலிய தீர்த்தங்களும் சராசரங்களும் கொம்பின் நுனியில் இருக்கும்; சிவன் சிரத்திலும், உமாதேவி நடு நெற்றியிலும், முருகக் கடவுள் மேல் நாசியிலும் விநாயகர், உள் நாசியிலும், அஸ்வனி தேவர் இரண்டு காதுகளிலும், சூரியன், சந்திரன் இரண்டு கண்களிலும், வாயு பல்லிலும், வருணன் நாவிலும், சரஸ்வதி ஓங்காரத்திலும், யமன் இருதயத்திலும், இயக்கர்கள் கண்டத் தலத்திலும், உதய அஸ்தமயன சந்திகள் உதட்டிலும், இந்திரன் கழுத்திலும் அருக்கர்கள் திமிளிலும், சாத்தியர் மார்பிலும், அனிலவாயு நான்கு கால்களிலும், மருத்துவர் முழந்தாழ்களிலும், நாகலோகத்தார் குரத்தின் நுனியிலும், கந்தருவர் குரத்தின் நடுவிலும், தேவமாதர்கள் மேற் குரத்திலும், உருத்திரர் முதுகிலும், வசுக்கள் சந்திகளிலும், பிதுருகள் அறைப்பலகையிலும், சப்தமாதர்கள் பக்கத்திலும், இலக்குமி அபானத்திலும், நாகேஸ்வரர் அடி வாலிலும் இருப்பர்; சூரியன் ஒளி வால் மயிரிலும், கங்கை மூத்திரத்திலும், யமுனை சாணத்திலும் இருக்கும். முனிவர்கள் ரோமத்திலும், பூமி தேவி உதிரத்திலும் இருப்பர்; சமுத்திரம் முலையிலும், காருகபத்தியம் முதலிய அக்னி மூன்றும் முறையே வயிறு, இருதயம், முகம் என்னும் உருப்புக்களிலும், யாகங்களெல்லாம் எலும்பிலும், சுக்கிலத்திலும் இருக்கும், கற்புடைய மகளிர் எல்லா அவயவங்களிலும் இருப்பர்.

இத் துணை சிறப்பினதாயுள்ள பசுக்களை உடையவர்கள் சிறிதும் வருத்தம் செய்யாமல் இரக்கத்தோடு மெல்ல நடத்தியும் காப்

பாற்றியும் வரவேண்டும். இரக்கமின்றி கோபித்து அதட்டி அடிப்போர் நரகத்தில் வீழ்வர். பசுக்களின் பெருமையை உணர்ந்து அவைகளை வலம் வந்து துதித்து வணங்கி புல் முதலியவைகள் கொடுத்தோர் சிவலோகத்தை அடைந்து இன்புறுவர். பசுக்களை தீண்டினும், தீவினைகள் நீங்கி நல்வினைகள் பெருகும். அவைகள் இம்மை, மறுமை இரண்டிலும் பயனைத் தரும். பசுக்களுக்கு சாலைகள் விதிப்படி செய்வித்து ஆற்றுமண், ஓடைமண், புற்றுமண், வில்வத்தடிமண், அரசடிமண் என்பவைகளால் நிலம் படுத்தி முதிர் கன்று, இளங்கன்று, நோயுற்ற கன்று இவைகளுக்கு இடங்கள் வெவ்வேறாக அமைக்க. நாடோறும் கோசல கோமயங்களை புறத்தே நீக்கி சுத்தி செய்க. மசகம் வராமல் தூபம் இடுக, தீபங்கள் ஏற்றுக. சாலை எங்கும் பூமாலை சாற்றுக. பசுக்களை சாலையினுள்ளே சுவத்தி என்னும் சொல்லைச் சொல்லி மெல்ல மெல்ல புகுத்தி சிரத்தையுடனும் புல்லை கொடுக்க, நோயுற்ற பசுக்களுக்கு வேறு இடம் அமைத்து மருந்து கொடுத்துப் பேணுக. அட்டமி தோறும் பசுக்களை நீராட்டி, பூசூட்டி அன்னமும், ஜலமும் ஊட்டி, தூப தீபங்காட்டி வணங்குக. பசுக்களை வேனிற் காலத்திலே சோலைகளிலும், மழைக்காலத்திலே மலைச்சாரல் வனங்களிலும், பனிக்காலத்திலே வெயில் மிகுந்த வெளிகளிலும், இடர் வரா வண்ணம் மேய்க்க. பசுக்களை இடர்நீங்க காக்காதவர்களும், பூசை செய்யாதவர்களும், காக்காத பாவிகளை தண்டிக்காத அரசனும் நரகத்தில் வீழ்வர். ஆவுரிஞ்சு கல் நாட்டுதலும் சிவனுக்கும் ஆசாரியருக்கும் பசுவை தானம் செய்தலும் குற்றமற்ற இலக்கணங்களுடைய இடபத்தை சிவ சன்னதிக்கு தானம் செய்தலும், சிவனது திருப்பணியின் பொருட்டு சகடத்திற்கு எருது கொடுத்தலும், இளைத்த பசுவை கண்டு இறங்கி தான் வாங்கி வளர்த்தலும் பெரும் புண்ணியங்களாம். பசுக்கள் தரும் பால், தயிர், நெய், கோசலம், கோமயம் என்னும் பஞ்ச கவ்வியங்களையும் சிவனுக்கு அபிஷேகம் பண்ணுவிக்க. பாலை இரண்டு மாசம் செல்லும்வரை கன்றை பருக வைத்து பின்கறந்து சிவனுக்கு அபிஷேகம் பண்ணுவிக்க கன்று பால் உண்டு முலையை விடுத்தபோது ஜலத்தினலே முலையைக் கழுவிக் கறக்க. ஆசை மிகுதியினலே கன்றுக்கு பால் விடாமல் கரந்தவன் நரகத்திலே விழுந்து நெடுங்காலம் வருந்தி பின்பு பூமியிலே பிறந்து கடும்பசியினலே வீடுகள் தோறும் இரப்பன். கபிலை பசுவின் பாலை சிவனுக்கே கொடுக்க; அதை தாம் பருகில் நரகத்தில் வீழ்வர். புலையர்கள் பசுக்களின் சாலைகளிலே புகுந்தார்களானல் எண்ணிலாத காலம் எரிவாய் நரகத்தில் வீழ்ந்து வருந்துவார்கள்; அவர்களுக்குப் பரிகாரம் இல்லை. மலட்டுப் பசுவின் மேலேனும் இடபத்தின் மேலேனும் பாரம் ஏற்றினேரும் இடபத்தில் ஏறினேரும் நரகத்தில் வீழ்வர். பசுக்களை பகைவர் கவரின் எதிர்த்

38-3



துக் கார்க்க. காத்தல் அருதாய வழி தம்முயிர் விடுத்தோர் சிவ பதம் அடைவர். இதுகாறும் கூறியவற்றிற்கு எல்லாம் பிரமாணம் சிவ தருமோத்திரத்துக் கோபுரவாயலின் இறுதியில் விரிவாய்க் காண்க.

இப் பசு மேய்த்தலாகிய உத்தம புண்ணியத்தால் சிறப்புற்ற வர் இச்சண்டேஸ்வரர். அவர் தாம் ஒரு நாள் இடையன் பசு நிரையினுள்ளே ஒரு பசுவை கோலினால் அடிக்கக்கண்டு இரக்க மிகுதியினாலே கோபம் மிகுந்து பசுக்களின் பெருமையை நன் குணர்ந்து அவைகளை மேய்த்தலின் சிறந்த புண்ணியம் இல்லை யெனவும் சிவனை வழிபடும் நெறியும் இதுவே எனவும் துணிந்து அவ்விடையனை அகற்றி அன்று தொடங்கி அந் நிரையை மெய்யன் போடு மேய்த்ததினாலே தெரியப்படும்.

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்

# சிவ பூஜை





ஆன்மாக்களுக்கு ஆணவமாகிய மூலமல காரணத்தினாலே கன்மானுசாரமாக உண்டாகும் பிறப்பு, அண்டசம், சுவேதசம், உற்பிச்சம், சராயுசம் என நால்வகைப்படும். அவற்றுள் அண்டசம் முட்டையிற்றோன்றுவன. சுவேதசம் வேர்வையிற்றோன்றுவன. உற்பிச்சம் வித்துக்களை மேற்பிளந்து தோன்றுவன. சராயுசம் கருப்பையிற்றோன்றுவன. இவைகளின் விரி எண்பத்து நான்கு நூறாயிரம் யோனி பேதமாம். இவ்வாறுள்ள யோனிகளுள், மற்றை யோனிகள் எல்லாவற்றையும் போகத்தினாலும் பிராயச்சித்தம் முதலியவற்றினாலும் நீக்கி, மனிதப் பிறப்பிலே வருதல், மிகுந்த அருமையாம். அவ்வருமை, ஆராயுங்காலத்து, கடலைக் கையினாலே நீந்திக் கரை ஏறுதல் போலாம். இத்தன்மைத்தாகிய மனிதப் பிறப்பை எடுப்பினும், சாத்திரமணம், வீசாத மலைகளிலும் வனங்களிலும் குறவர் மறவர்களாய்ப் பிறவாமல், சாத்திரம் வழங்கும் தேசங்களிலே பிறப்பது மிகுந்த புண்ணியம். அதினும், வேதாகமங்கள் வழங்காத மிலேச்ச தேசத்தைவிட்டு அவை வழங்கும் ஆரிய தேசத்திலே பிறப்பது மிகுந்த புண்ணியம். அதினும், ஈன சாதி

களாய்ப் பிறவாமல் பிராமணர் முதலிய நான்கு வருணத் தாராய்ப் பிறப்பது மிகுந்த புண்ணியம். அதினும், பரசமயங்களில் செல்லாமல் சிவனே பரமபதி என்று தெளிந்து வழிபடும் சைவ சமயத்தைச் சார்தல் இத்துணைத்தென்று கூறலாற்றாத பெரும் புண்ணியமாம். இதற்குப் பிரமாணம், சிவஞான சித்தியார் “ அண்டசஞ் சுவேத சங்களுற்பிச்சஞ் சராயுசத்தோ—டெண்டரு நாலெண்பத்து நான்கு நூறுபிரத்தா—லுண்டு பல்யோனியெல்லா மொழித்து மானுடத்துதித்தல்—கண்டிடிற் கடலைக் கையானீந் தினன் காரியங்காண். நரர்பயிறேசந் தன்னினுன் மறைபயிலா நாட்டில்—விரவுதலொழிந்துதோன்றன் மிக்க புண்ணியந் தானுகுந் தரையினிற் கீழைவிட்டுத் தவஞ்செய்சாதியினில்வந்து—பரசமயங் கட்கெல்லாப் பாக்கியம் பண்ணுேதே. வாழ்வெனுமையல் விட்டு வறுமையாஞ் சிறுமை தப்பித்—தாழ்வெனுந் தன்மையோடுஞ் சைவமாஞ்சமயஞ்சாரு — மூழ்பெறலரிது சாலவுயிர் சிவஞானத் தாலே — போழிளமதியினனைப் போற்றுவாரருள் பெற்றுரே ” எனவரும்.

இவ்வருமை யாகிய மனிதப் பிறப்பை உண்டாக்கியது, பசு பதியாகிய சிவனை, மனசினுலே நினைத்தற்கும், வாக்கினுலே துதித்தற்கும், கைகளினுலே பூசித்தற்கும், கால்களினுலே வலம் வருதற்கும், தலையினுலே வணங்குதற்கும், செவிகளினுலே அவரது புகழைக் கேட்டற்கும், கண்களினுலே அவரது திருமேனியைத் தரிசித்தற்குமாம். மேலுலகத்துள்ள பிரமாவிட்டுணு இந்திரன் முதலியோரும் இப்பூமியின் கண்ணே வந்து சிவனைப் பூசிப்பார் கள். ஆதலால், இம்மனித சரீரம் கிடைத்தற்கு அரியது. இச் சரீரம் உள்ளபொழுதே சிவபூசையைப் பண்ணி, மோக்ஷத்தைப் பெறுதொழியில்; பின்பு மோக்ஷம் கிடைத்தல் அரிது அரிது! ஆன் மாக்கள் தாம் நல்ல சரீரம் எடுத்தும், இவையெல்லாம் சிறிதும் ஆராயாமல், ஐயையோ! வீணுகத் திரிந்து காலங்கழிக்கும் அறியாமை இருந்தபடி என்னே! “மானுடப் பிறவிதானும் வகுத் தது மனவாக்காயத் — தானிடத்தைந்து மாடுமரன்பணிக்காக வன்றே ” வானிடத்தவருமண்மேல் வந்தரன்றனையர்ச்சிப்ப — ரூனெடுத்துழலுமூமரொன்றையு முணராரந்தோ” என சிவஞான சித்தியாரினும்.” கண்ணுதலா லயநோக்குங் கண்களே கண்கள் கறைக்கண்டன் கோயில் புகுங்கால்களே கால்கள்—பெண்ணெரு பாகனைப் பணியுந் தலைகளே தலைகள் பிஞ்ஞகனைப் பூசிக்குங் கைகளே கைகள்—பண்ணவன்றன் சீர்பாடு நன்னவே நன்னப் பரன்சரிதையே கேட்கப்படுஞ் செவியே செவிக — ளண்ணல் பொலங்கழனினைக்கு நெஞ்சமே நெஞ்சமவனடிக்கீ ழடிமைபுகு மடிமையேயடிமை ” எனப் பிரமோத்தர காண்டத்தினும், கூறு மாற்றுனும் உணர்க.

சிவபூசையாவது, புட்பம் திருமஞ்சனம் முதலிய உபகரணங்கள் கொண்டு, ஆத்தும சுத்தி, தான சுத்தி, திரவிய சுத்தி, மந்திர சுத்தி, இலிங்க சுத்தி என்னும் பஞ்ச சுத்திகளும் செய்து, சிவலிங்கத்தின் பீடத்திலே சத்தியாதி சத்தி பரியந்த பதுமமாகிய சிவாசனம் பூசித்து, அதன்மேல் இலிங்கத்திலே வித்தியாதேகமாகிய மூர்த்தியை நியாசஞ் செய்து, அவ்வித்தியாதேகத்திற்குச் சீவனாய் உள்ள நிஷ்களரூபரும் ஞானானந்தமயரும் சருவகர்த்தாவும் சர்வ வியாபகருமாகும் பரமசிவனாகிய மூர்த்திமானைத் துவாதசாந்தத்தின் மேலே தியானித்து, முன்னே நியாசஞ் செய்த வித்தியாதேகத்தில் ஆவாகித்து, "சுவாமீ, சருவ ஜகத்திற்கும் நாதரே, பூசையின் முடிவு எதுவரையுமோ அதுவரையும் நீர் பிரீதியுடன் இவ்விலங்கத்திலே சாந்நித்தியராய் இரும்." என்று விண்ணப்பம் செய்து, பூசித்து, ஸ்தோத்திரம், பிரதக்ஷிணம், நமஸ்காரம் பண்ணி முடித்தலாம். லிங்கம் என்னும் தாது சித்தரித்தல் என்னும் பொருட்டாதலால், படைத்தல், காத்தல் முதலிய வற்றால் உலகத்தைச் சித்தரிப்பதாகிய பரமேஸ்வரப் பிரபாவமே லிங்கம் எனப்படும். அவ்விலிங்கத்தின் வியத்திஸ்தானமாகிய சைலம், ஸ்பாடிகம், க்ஷணிகம், லோகஜம் என்பனவும் உபசாரத்தாலே இலிங்கம் எனப்படும். வித்தியாதேகமாவது பஞ்ச கிருத்தியங்களை அதிட்டிக்கும் சத்தியேயாம். மூலமலம் முதலியன இன்மையால் சிவனுக்கு வைந்தவம் முதலிய சரீரம் இன்றி சத்தி சரீரம் உண்டாம். அச்சரீரம் பஞ்ச கிருத்திய உபயோகிகளாகிய ஈசானம் முதலிய பஞ்ச மந்திரங்களாலே சிரம் முதலாகக் கற்பிக்கப்படும். சிவன் நிராகார வஸ்துவாகிய தம்மை ஆன்மாக்கள் தியானித்தல், பூசித்தல் கூடாமையால், பத்தர் அனுக்கிரகத்தின் பொருட்டே இச்சத்தி காரியமாகிய கற்பனாசரீரம் கொண்டார் என்க.

இவ்வாறு அன்போடு பூசைசெய்யப்படில், கருணாநிதியாகிய சிவன் இலிங்கத்தில் நின்று அப்பூசையை ஏற்று, அதுசெய்தார்க்கு அருள் செய்வார். அது, "தாபரஞ் சங்கமங்களென்றிரண்டுருவினின்று — மாபரன் பூசைகொண்டு மன்னுயிர்க் கருளைவைப்ப. னீபரன்றன்னை நெஞ்சினினைவையே னிறைந்த பூசை—யாய்பரம் பொருளை நாளுமர்ச்சி நீ யன்பு செய்தே" என்னும் சிவ ஞான சித்தித்திருவிருதத்தால் உணர்க. அன்பின்றிச் செய்யப்படும் பூசை பயன் படாமை "நெக்குநெக்கு நினைப்பவர் நெஞ்சுளே—புக்குநிற்கும் பொன்னார்சடைப் புண்ணியன்—பொக்க மிக்கவர் பூவுநீருங் கண்டு, நக்கு நிற்பனவர் தம்மை நாணியே" என்னும் **திருநாவுக்கரசு நாயினார்** தேவாரத்தானும், "கையொன்று செய்ய விழியொன்று நாடக் கருத்தொன்றெண்ணப்—பொய்யொன்று வஞ்சக நாவொன்று பேசப் புலால் கமழு—மெய்யொன்று சாரச் செவி

யொன்று கேட்க விரும்புமியான்—செய்கின்ற பூசை யெவ்வாறு கொள்வாய் வினைதீர்த்தவனே" என்னும் பட்டினத்துப் பிள்ளையார் வாக்கானும் உணர்க.

இச்சண்டேசுர நாயனர் முற்பிறப்பில் வேதாகமங்களை ஓதி உணர்ந்து, சிவ பூசையை விதிவழுவாது செய்தமையாலன்றே, இப்பிறப்பில் மிகுந்த இளமை பிராயத்திற்றனே சகல சாத்திரப் பொருள்களையும் எளிதில் உணர்ந்து, சிவனே எம்மை உடையவர் என்றும் மெய்யுணர்வினுலே, சிவன் மாட்டு இடையருது மேன் மேலும் பெருகிவரும் அத்தியற்புதமாகிய மெய்யன்பே வடிவாயி னர். இவருக்கு வேதாகமங்கள் எல்லாம் முற்பிறப்பின் அறிவு தொடர்ச்சியினுல் எளிதில் விளங்கின என்பது இங்கே "ஐந்து வருட மவர்க்கணையவங்கமாறு முடனிறைந்த—சந்தமறைகளுட் பட முன்றலைவர் மொழிந்த வாகமங்கண் — முந்தையறிவின் ருெடர்ச்சியினுன் முகைக்கு மலரின் வாசம்போற்—சிந்தைமலர வுடன் மலருஞ்செவ்விணர்வு சிறந்ததால்" என்பதனுலும், "குலவு மறையும் பலகலையுங் கொளுத்துவதன்முன் கொண்டமைந்த— நிலவு முணர்வின்றி றங்கண்டு நிறுவு மறையோ ரதிசயத்தார்" என்பதனுலும், "உணர்த்தப்பட்டது, ஒரு பிறப்பிற் கற்ற கல்வி மறுப்பிறப்புக்களினும் பயன்படும் என்பது" ஒருமைக் கட்டான் கற்றகல்வியொருவற் — கெழுமையுமே மாப்புடைத்து" என்றும் திருக்குறளானும் உணர்க, இவர் முற்பிறப்பிலே சிவபூசை செய் தவர் என்பது இங்கே "அங்கண்முன்னை யர்ச்சனையினளவின் ருெடர்ச்சி விளையாட்டதற் தொடர்தமையால்" என்பதனுல் குறிக் கப்பட்டது. இவரது அன்பின் முதிர்ச்சி "நடமேபுரியும் சேவடி யார் நம்மையுடையா ரென்னு மெய்ம்மை—யுடனே தோன்று முணர்வின் கணொழியா தோங்கும் வழியின் பின்—கடனே யியல்பாய் முயற்றி வருங் காதன் மேன்மேலெழுங்கருத்தின் — இடைநேர் நிற்குஞ் செம்பலார் திருமுநாளிலாங்கொருநாள்" என்பதனுல் உணர்த்தப் பட்டது.

ஆன்மா சிவன் உடைமை என்பது "அநாதி சிவனுடைமை யாலெவ்வையுமாங்கே—யநாதியெனப்பெற்றவனுவை — யநாதியே —யார்த்த துயரகல வம்பிகையோ டெவ்விடத்துங்—காத்தலவன் கடனே காண்" என்னும் திருக்களிற்றுப்பாடியாரானும், உணர்க. இவர் முற்பிறப்பில் விதிவழுவாது பூசையின் ருெடர்ச்சியினுற் ருனே, இப்பிறப்பில் மிகுந்த இளமை பிராயத்திலே, பசுப்பால் சிவனுக்கு திருமஞ்சனமாந்தகுதி உடைமையை நினைந்தவுடனே, சிவபூசையில் மிக்க ஆசையுடயவராய் அதனைச் செய்வாராயினுர். அப்பூசை பிறருக்கு விளையாட்டாகத் தோன்றியதாயினும், இடை

யருது மெய்யன்பினலே செய்யப்பட்டமையானன்றே உயிர்க்குயி ராகிய சிவனுக்கு மிக உவப்பாயிற்று.

இந் நாயனர் சிவனது உண்மையை நினைத்தல், கேட்டல் காண்டல் செய்தபொழுதே கரையழிந்து அன்பினலே ஓர் பயனும் கருதாது அவ்வன்புதானே தமக்கு இன்பமாகத் தம்மை மறந்து நின்றார் என்பது. இவர் சிவபூசை செய்யும்பொழுது தந்தையாகிய எச்சதத்தன் முதுகிலே பல முறை அடித்துக் கொடு மொழிகளைக் கூறவும், தாம் அவற்றை சிறிதும் அறிந்திலாமை யானும், அவன் பாற்குடத்தைக் காலால் இடறிச்சிந்தக் கண்ட போது அவன் தமது தந்தை என்று கண்டும், தமது பரம பிதா வாகிய சிவனுக்கு அபராதம் செய்தமைப்பற்றி அவன் கால்களைத் துணித்து, முன்போலவே பூசிக்கப் புகுந்தமையானும் செவ்விதிற் றுணியப்படும். இப்பத்தியோகத்தால் அன்றே, உடனே கருணை நிதியாகிய சிவன் இடபாரூடராய் வெளிப்பட்டு, தமது அருமைத் திருக்கரங்களால் இவரை எடுத்து, நீ நம் பொருட்டு உன்னைப் பெற்ற பிதாவை வெட்டினுய், இனி உனக்கு நாமே பிதா என்று அருளிச்செய்து, இவரை அணைத்து, இவருடைய சரீரத்தை தடவி உச்சிமோந்து, இவருக்கு அந்த சரீரத்திலே தானே தமது சாரூப்பியத்தைக் கொடுத்து, தொண்டர்களுக்கெல்லாம் தலைமை யாகிய **சண்டேசு பதத்தில் இருத்தி யருளினர்.**

இவர் சரீரத்திற்றனே சிவ சாரூப்பியம் பெற்றமை இங்கே "செங்கண் விடையார் திருமலர்க்கை தீண்டப்பெற்ற சிறுவனே ரங்கண்மாயை யாக்கையின் மேலளவின் றுயர்ந்த சிவ மயமாய்ப் பொங்கி யெழுந்த திருவருளின் மூழ்கிப் பூமேலயன்முதலாந்-துங்க வமரர்." துதி செய்யச் சூழ்ந்த வொளியிற்றேன்றினர். என்பத னலும், "வந்துமிகை செய்தாதை தான் மழுவாற்றுணித்தமறைச் சிறுவ-ரந்தவுடம்பு தன்னுடனே யரனர் மகனராயினர்." என் பதாலும், உணர்த்தப்பட்டது. **சிவஞான சித்தியாருரையிலே** "அந்த தேகத்திலே தானே சிவ சாரூப்பியத்தைப்பெற்றார்." என் றார் **சிவாக்கிரயோகிகளும்.**

இந் நாயனர், பிராமணனும் தமக்குப் பிதாவும் குருவுமாகிய எச்சதத்தனை மழுவினல் வெட்டியும், பிரம்கத்தி, பிதிர்கத்தி, குரு கத்தி என்னும் தோஷங்கள் பொருந்தாது, சிவ சாரூப்பியம் பெற்ற மையாது காரணத்தாலெனின்; சிவ பூசையின் மிக்க புண்ணிய மும் சிவாபராதத்தின் மிக்க பாவமும் இன்மையானும், இவர் செய்யும் சிவ பூசைக்கு எச்ச தத்தன் இடையூறு செய்தமை சிவா பராதமாதலானும், இவர் பரம பிதாவும் பரம குருவுமாகிய சிவ னிடத்து உள்ள அன்பு மிகுதியினல் அவர் நிமித்தமே அவ்வெச்ச தத்தனை வெட்டினமையானும் தஞ்செயலற்றுச் சிவாதீனமாய்

கிற்போர் செய்தது பாதகமாயினும் அதனை சிவன் தமது பணியாகவே பண்ணிவிடுவராதலானும், என்க. "அரனடிக்கன்பர் செய்யும் பாவமுமறமதாகும் பரனடிக்கன்பிலாதார் புண்ணியபாவமாகும்—வரமுடைத்தக்கன் செய்த மாவேள்வி தீமையாகி நானிற் பாலன் செய்த பாதக நன்மையாய்த்தே." எ-ம். "இவனுலகிலிதமகிதஞ் செய்தவெல்லாமிதமகிதமிவனுக்குச் செய்தார் பாலிசையு-மவனிவனாய் நின்ற முறையேகனாகி யரன் பணியினின்றிடவுமகலுங் குற்றஞ்-சிவனுமிவன் செய்தியெல்லாமென் செய்தி யென்றும் செய்ததெனக் கிவனுக்குச் செய்ததென்றும்-பவமகலவுடனாகி நின்று கொள்வன் பரிவாற் பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கிவிடுமே." எ-ம் சிவஞான சித்தியாரில் கூறுமாற்றானும், உணர்க. இன்னும், இந் நாயனாரால் இம்மையிலே தண்டிக்கப்பட்டமையால் அன்றே எச்சதத்தன் சிவத்துரோகத்தால் மறுமைக்கண் நரகத்தில் வீழ்ந்து வருந்தாது தன் சுற்றத்துடன் சிவலோகத்தை யடைந்தான். அக்கத்திய முனிவருக்கும் இராமருக்கும் தமக்கும், பிறர்க்கும் பெருந்தீங்கு செய்த வில்வலன் வாதாவியையும் இராவணனையும் கொன்றமையாலாகிய பிரமகத்தியைச் சிவபூசையே ஒழித்தமையாலும், இச்சண்டேசுர நாயனார் தமது சிவ பூசைக்கு இடையூறு செய்தலாகிய சிவாபராதம் கண்ட வழிச் செய்த பிரமகத்தி முதலியன சிவசாருப்பியம் பயந்தமையாலும் சிவ பூசையின் மிக்க புண்ணியமும் சிவாபாராதத்தின் முக்ய பாவமும் இல்லை என்பது தெளிக.

இச் சண்டேசுர நாயனாரது பெருந்தன்மை "பீரடைந்த பாலதாட்டப்பேணாதவன் றாதை—வேரடைந்து பாய்ந்த தாளை வேர்த்தடிந்தான் றனக்குத்—தாரடைந்தமாலை சூட்டித் தலைமை வகுத்ததென்ன—சீரடைந்த கோயின் மல்கு சேய்ஞலூர் மேயவனே." எ-ம். "கடி சேர்ந்தபோது மலரான் கைக்கொண்டு நல்ல—படி சேர்ந்த பால் கொண்டங் காட்டிடத் தாதை பண்டு—முடி சேர்ந்த காலை யற வெட்டிட முக்கண் மூர்த்தி—யடி சேர்ந்த வண்ண மறிவார் சொலக்கேட்டு மன்றே." எனத் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாராலும் "தழைத்ததோ ராத்தியின் கீழ்த்தாவர மணலாற் கூப்பி—யழைத்தங்கே யாவின் பாலைக் கறந்துகொண்டாட்டக் கண்டு—பிழைத்ததன் றாதை தாளைப் பெருங்கொடு மழுவால் வீசக்—குழைத்ததோ ரமுத மீந்தார் குறுக்கைவீ ரட்டனாரே." எனத் திருநாவுக்கரசு நாயனாராலும், "ஏத நன்னில மீரறுவேலியேயர் கோனுற்ற விரும்பிணி தவிர்த்துக்—கோதனங்களின் பால்கறந்தாட்டக் கோல வெண்மணற் சிவன் றன்மேற் சென்ற தாதை தாளற வெறிந்த சண்டிக்குன் சடைமிசைம் மலரருள் செயக் கண்டு—பூதவாளி நின் பொன்னடி யடைந்தேன் பூம்பொழிற்றிருப் புன் கூருளானே." என்று சுந்தரமூர்த்தி நாயனாராலும், "தீ தில்லை மாணி சிவகருமஞ் சிதைத்தானைச்—சாதியும் வேதியன் றாதை தனைத்

தாளிரண்டுஞ்—சேதிப்ப வீசன் றிரு வருளாற்றேவர் தொழப்—பாதகமே சோறுபற்றினவா தோணேக்கும்." என **மாணிக்கவாசக சுவாமிகளாலும்** "தாதையைத் தாளற வீசிய சண்டிக்கு மண்டத்தொடுமுடனே — பூதலத்தோரும் வணங்கப்போற் கோயிலும் போனக மும்மருளிச்—சோதிமணி முடித்தாமமு நாமமுந் தொண்டர்க்கு நாயகமும்—பாதகத்துக்குப் பரிசுவைத்தானுக்கே பல்லாண்டு கூறுதுமே." எனச் **சேந்தனாராலும்**, "பாதகமே யென்றும் பழி என்றும் பாரதே—தாதையை வேதியனைத் தாளிரண்டுஞ்—சேதிப்பக்-கண்டீசர்தாமாம் பரிசளித்தார் கண்டாயே-சண்டீசர் தஞ் செயலாற்றுன்." என உய்யவந்த **தேவநாயனாராலும்**, புகழப்பட்டமை காண்க. **திருஞானசம்பந்தமூர்த்தி** நாயினார் புராணத்திலே திருமுகப் பாசுரத்தின் ருற்பரியம் கூறுமிடத்து "கருதுங் கடிசேர்ந்த வெனுந்திருப் பாட்டிலீசர் மருவும் பெரும் பூசை மறுத்தவர்க்கோறன்முத்தி—தருதன்மையதாதல் சண்டீசர் தஞ் செய்கை தக்கோர்—பெரிதுஞ் சொலக் கேட்டன மென்றனர் பிள்ளையார் தாம் என்ருர் **சேக்கிழார் நாயனார்**. தந்தை தாளொடும் பிறவித்தாளெறிந்து, "நிருத்தரிரு தாளேச் சேர்ந்த மைந்தர்தாள்" **திருவிளையாடற் புராணம்**.

சண்டேசுரர் சிவ பூசையின் இறுதியிலே பூசிக்கப்பட்டு, சிவனுல் ஏற்றுக்கொள்ளப்பட்ட அன்னம் பானீயம் முதலியனவும் தாம்பூலம் மாலே சந்தனமும் ஆகிய நிருமாலியங்களே ஏற்று சிவ பூசா பலத்தைக் கொடுக்கும் அதிகாரம் உடையவர். இச்சண்டேசுர பூசை செய்யாவழிச் சிவ பூசையாற் பயன் இல்லே. அது "சண்டனேயர்ச்சித்தவரே சம்புவேயர்ச் சித்தபலங்—கொண்டிடுவர் மற்றையார் கொள்ளார். என்னும் சைவ சமயநெறித் **திருக்குறளான் உணர்க**. சிலர் ஆன்மார்த்த பூசையிலே சண்டேசுர பூசையை வேண்டாது விலக்குகின்றனர். சைவ சித்தாந்தத்திலே சண்டேசுரரை எவ்விடத்தும் எப்போதும் பூசிக்க என்னும் நியமம் உள்ளது; சண்டேசுர பூசை விலக்கு, வாம தந்திரத்தும், தக்ஷிண தந்திரத்துமாம். இது காலோத்தராகமத்திற் கூறப்பட்டது, சிருட்டி காலத்திற்ருேன்றிய சிவாகமங்களிலே சண்டேசுர பூசை விதிக்கப்பட்டதாயின், இந்நாயனருக்கு முன்னும் சண்டேசுரர் உளர் என்பது பெறப்படுமன்ருேவெனின்; சத்தியம் நீ சொல்லியது அட்டவித்தியேசுரர் முதலியோருள் ஒருவர் பரமுத்தியையேனும் தமது பதத்தின் மேலாகிய பதத்தையேனும் அடைய மற்ருெருவர் அப்பதத்தை அடைதல் போலவே, இவ்விசாரசருமர் முன்னுள்ள சண்டேசுரரது பதத்தை அடைந்தார் எனக்கொள்க.

இதுகாறும் கூறியவாற்ருல், சிவபூசையின் மிக்க புண்ணியமும் சிவத்துரோகத்தின் மிக்க பாவமும் இல்லே என்பது தெள்ளி

திற பெறப்பட்டது, ஆதலால், இச்சரீரம் உள்ள பொழுதே சிவலிங்கார்ச்சனைக்கு உரியோர்கள் சைவாசாரியாரை அடைந்து, சிவ தீக்ஷை பெற்று, விதிவழுவாது மெய்யன்போடு சிவ பூசை பண்ணுக. சிவலிங்கார்ச்சனைக்கு உரியரல்லாதவர் ஆசாரியரை அடைந்து, தங்கள் தங்கள் அதிகாரானுகுணமாகிய தீக்ஷியைப் பெற்றுக் கொண்டு: தூலலிங்கமாகிய கோபுரத்தையும், தூபியையும் பத்திர புஷ்பங்களாலே பூசித்து, துதித்து, வலஞ்செய்து, வணங்குக. அது "உயர்ந்த குலத்தோருட் பழுதுறுப்பிறைரு—முயர்ந்தாரை யல்லாதாரும். குறித்து மறுமை குரவன் பதத்தைக்— குறித்தவன் செய்தீக்கைதகக்கொண்டு. குறித்துச் சிவனெனக் கோபுரத்தைப் பூவும்—பறித்தருச்சித்தேத்துக பாங்கால்." எனச் சைவ சமயநெறியினும், "தூபியினைக்கோபுரத்தை யீசனெனக்கண்டு தொழுபாபமறும் வாய்த்துறுமின் பம்." என வருத்தமறவுய்யும் வழியினும், கூறுமாற்றேனும் உணர்க. தங்கள் தங்கள் வருணத்திற்கு அருகமாகிய ஒருவனிடத்தே உயிர்க்குறவாகிய சிவனை பூசைசெய்யாதவர்களுக்கு ஓர் துணையும் இல்லை. அது "தமக்கருக மோருவிற் பூசை சமையார், தமக்குத் துணையாதோ தான்." என்னும் சைவ சமய நெறித் திருகுறளால் அறிக, சிவ பூசை பண்ணுதார் இழிவு "திருக் கோயிலில்லாத திருவிலூருந் திருவெண்ணீறணியாத திருவிலூரும் —பருக்கோடிப் பத்திமையாற் பாடா வூரும் பாங்கினற் பல தளிகளில்லா வூரும்—விருப்போடு வெண்சங்கமூதா வூரும் விதானமும் வெண்கொடியுமில்லாவூரு — மருப்போடு மலர் பறித்திட்டுண்ணு வூரு மவையெல்லா மூரல்ல வடவிகாடே." திருநாம மஞ்செழுத்துஞ் செப்பாராகிற்றீ வண்ணர் திறமொரு காற்பேசாராகி—லொருகாலுந் திருக்கோயில் சூழாராகி லுண்பதன்முன் மலர் பறித்திட்டுண்ணாராகி— லருநோய்கள் கெட வெண்ணீறணியாராகி லளியற்றார் பிறந்தவாறேதோ வென்னிற்—பெருநோய்கண் மிகநலிய பேர்த்துஞ் செத்தும் பிறப்பதற்கே தொழிலாகி யிறக்கின்றாரே." என்னும் திருநாவுக்கரசு நாயினர் தேவாரங்களால் உணர்க.

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சண்டேசுர நாயனர் புராணம்

பூந்தண் பொன்னியெந்நாளும் பொய்யாதளிக்கும் புனனாட்டு
வாய்ந்தமண்ணித் தென்கரையின் மன்னமுன்னாள் வரைகிழிய
வேந்துமயில்வே லினைகாட்டி யிமையோரிகல் வெம்பகைகடக்குஞ்
சேந்த னளித்த திருமறையோர் மூதூர் செல்வச் சேய்ஞலூர்.

செம்மை வெண்ணீற் றொருமையினு ரிரண்டு பிறப்பின்சிறப்பினுர்
மும்மைத் தழலோம் பியநெறியார் நான்கு வேத முறைபயின்ருர்
தம்மை யைந்துபுலனும்பின் செல்லுந் தகையா ரறு தொழிலின்
மெய்ம்மை யொழுக்க மேழுலகும் போற்று மறையோர்விளங்குவது.

கோதின்மான்ருேற்புரிமுந்நூல்குலவு மார்பிற் குழைக்குடுமி
யோது புடைசூழ் சிறுவர்களுமுதவும் பெருமை யாசானும்
போதின்விளங்குந் தாரகையு மதியும் போலப்புணர்மடங்கண்
மீதுமுழங்கு முகிலொதுங்கவேதவொலிகண் முழங்குவன.

யாக நிலவுஞ் சாலைதொறு மறையோரிந்த வவியுணவின்
பாக நுகர வருமாலு மயனுமூரும் படர்ச்சிறைப்புண்
மாக மிகந்து வந்திருக்குஞ் சேக்கையெனவும் வானவர்கோ
னுக மணையுங் கந்தெனவுநாட்டும்யூப வீட்டமுள.

தீம்பாலொழுகப் பொழுதுதொறு மோமதேனுச்செல்வனவுந்
தாம்பாடியசாமங்கணிப் போர் சமிதை யிடக்கொண் டணைவனவும்
பூம்பா சடைநீர்த் தடமூழ்கி மறையோர் மகளிர் புகுவனவு
மாம்பான்மையினில் விளங்குவன வணிநீண் மறுகுபலவுமுள.

வாழ்பொற் பதிமற்றதன்மருங்கு மண்ணித்திரைகள் வயல்வரம்பின்
ருழ்விற் றரளஞ் சொரிகுலைப்பாற்சமைத்த யாகத்தடஞ்சாலை
சூழ்வைப்பிடங்க ணெருங்கியுளதொடங்கு சடங்குமுடித்தேறும்
வேள்வித்தலைவர் பெருந்தேர்கள் விண்ணேரேறும் விமானங்கள்.

மடையிற்கழுநீர் செழுநீர் சூழ்வயலிற் சாலிக்கதிர்க்கற்றை
புடையிற் சுரும்பு மிடைகமுகு புனலிற் பரம்பு பூம்பாளை
யடையிற் பயிலுந்தாமரைநீளலரிற்றுயிலுங் கயல்கள்வழி
நடையிற்படர்மென் கொடிமௌவ ளணையிற்றிகழுஞ் சினைக்காஞ்சி,

சென்னி யபயன் குலோத்துங்கசோழன் றில்லைத் திருவெல்லை
பொன்னின் மயமாக் கியவளவர்போரேறென்றும் புவிகாக்கு
மன்னர் பெருமானநபாயன் வருந்தொன்மரபின் முடிசூட்டுந்
தன்மை நிலவு பதியைந்தி னென்ருய் நீடுந்தகைத்தவ்வூர்.

பண்ணின் பயனு நல்லிசையும் பாலின் பயனு மின்சுவையுங்
கண்ணின் பயனும் பெருகொளியுங் கருத்தின் பயனுமெழுத்தஞ்சும்,
விண்ணின் பயனும் பொழிமழையும் வேதப் பயனுஞ் சைவமும் போன்
மண்ணின் பயனு மப்பதியின் வளத்தின்பெருமை வரப்புடைத்தோ.

பெருமை பிறங்கு மப்பதியின் மறையோர் தம்முட் பெருமனைவாழ்
தரும நிலவு காசி பகோத்திரத்துத்தலைமை சான்மரபி
லருமை மணியுமளித்ததுவே நஞ்சுமளிக்குமரவுபோ
லிருமை வினைக்குமொருவடி வாமெச்ச தத்தனுளனுனன்.

மற்றமறையோன்றிருமனைவி வாய்ந்த மரபின் வந்துதித்தாள்
சுற்றம் விரும்பு மில்வாழ்க்கைத் தொழிலா ளுலகிற்றுணைப்புதல்வற்
பெற்று விளங்குந் தவஞ்செய்தாள் பெரும்பேறெல்லைப்பயன் பெறு
பற்றையெறியும் பற்றுவரச் சார்பாயுள்ள பவித்திரையாம். [வாள்

நன்றிபுரியு மவர்தம்பானன்மை மறையின் றுறைவிளங்க
வென்றுமறையோர் குலம்பெருக வேழு புவனங்களுமுய்ய
மன்றி னடஞ்செய் பவர்சைவ வாய்மைவளர மாதவத்தோர்
வென்றி விளங்கவந்துதயஞ்செய்தார் விசாரசருமனார்.

ஐந்துவருட மவர்க்கணைய வங்கமாறு முடனிறைந்த
சந்த மறைக ளுட்படமுன் றலைவர் மொழிந்தவாகமங்கண்
முந்தை யறிவின்றொடர்ச்சி யினான் முகைக்குமலரின் வாசம்போற்
சிந்தைமலர வுடன்மலருஞ் செவ்வி யுணர்வு சிறந்ததால்.

நிகழு முறைமை யாண்டேழுநிரம்பும் பருவம் வந்தெய்தப்
புகழும் பெருமை யுபநயனப்பொருவில் சடங்குமுடித்தறிவி
னிகழு நெறியவல்லாதவெல்லா மியைந்த வெனினுந்தந்
திகழு மரபி னோதுவிக்குஞ் செய்கை பயந்தார் செய்வித்தார்.

குலவுமறையும் பலகலையுங் கொளுத்து வதன்முன் கொண்டமைந்த
நிலவு முணர்வின் றிறங்கண்டு நிறுவு மறையோரதிசயித்தா
ரலகில் கலையின் பொருட்கெல்லை யாடுங்கழலே யெனக்கொண்ட
செலவு மிகுந்த சிந்தையினிற்றெளிந்தார்சிறியபெருந்தகையார்.

நடமே புரியுஞ் சேவடியார் நம்மை யுடையாரெனுமெய்மை
யுடனே தோன்று முணர்வின்கணொழியாதூறும்வழியன்பின்
கடனேயியல்பாய் முயற்றிவருங் காதன்மேன்மேலெழுங்கருத்தின்
றிடநேர் நிற்குஞ் செம்மலார் திகழுநாளிலாங் கொருநாள்.

ஓது கிடையினுடன் போவாரூரானிரையினுட்புக்க
போதுமற்றங் கொருபுனிற்று போற்றுமவன்மேன்மருப்போச்ச
யாது மொன்றுங் கூசாதேயெடுத்தகோல்கொண்டவன்புடைப்ப
மீது சென்று மிகும்பரிவால் வெகுண்டு விலக்கி மெய்யுணர்ந்து.

பாவுங்கலைகளாகமநூற் பரப்பின் றொகுதிபான்மையினான்
மேவும் பெருமை யருமறைகண் மூல மாக விளங்குலகில்
யாவுந்தெளிந்தபொருணிலையேயெய்த வுணர்ந்தவுள்ளத்தா
லாவின் பெருமை யுள்ளபடி யறிந்தாராயற்கருள்செய்வார்.

தங்குமகிலயோனிகட்குமேலாம் பெருமைத் தகைமையன
பொங்கு புனித தீர்த்தங்களெல்லாமென்றும் பொருந்துவன
துங்க வமரர் திருமுனிவர் கணங்கள் சூழ்ந்துபிரியாத
வங்கமனைத்துந் தாமுடையவல்லவோநல் லானினங்கள்.

ஆய சிறப்பி னாற்பெற்ற வன்றே மன் று ணடம்புரியு
நாயனார்க்கு வளர்மதியு நதியு நகுவெண்டலைத்தொடையு
மேயவேணித் திருமுடிமேல் விரும்பியாடியருளுதற்குத்
தூய திருமஞ்சனமைந்து மளிக்கு முரிமை சுரபிகடாம்.

சீலமுடைய கோக்குலங்கள் சிறக்குந்தகைமைத் தேவருடன்
கால முழுது முலகனைத்துங்காக்கு முதற்காரணராகு
நீலகண்டர் செய்யசடை நிருத்தர் சாத்துநீறுதரு
மூலமவதாரஞ்செய்யு மூர்த்த மென்றான் முடிவென்னே.

உள்ளுந் தகைமை யினிப்பிறவே றுளவே யுழைமான்மறிக்கன்று
துள்ளுங் கரத்தா ரணிபணியின் சுடர் சூழ் மணிகள் சுரநதிநீர்
தெள்ளுறு சடையார் தேவர்கடம் பிராட்டி யுடனேசேரமிசைக்
கொள்ளுஞ்சினமால் விடைத்தேவர் குலமன் றேவிச்சுரபிகுலம்.

என்றின் னனவே பலவுநினைந் திதத்தின் வழியே மேய்த்திந்தக்
கன்று பயிலா நிரைகாக்கு மிதன்மேலில்லை கடனிதுவே
மன்றுளாடுஞ் சேவடிகள் வழுத்து நெறியா வதுமென்று
நின்றவாயன் றனைநோக்கி நிரைமேய்ப் பொழிக நீயென்பார்.

யானே யினியிந் நிரைமேய்ப்ப னென்றா ரஞ்சியிடைமகனுந்
தானேரிறைஞ்சிவிட்டகன்றான் றாமு மறையோ ரிசைவினா
லானேர் நெருங்கும்பேராய மளிப்பாராகிப்பைங்கூழ்க்கு
வானே யென்ன நிரைகாக்கவந்தார் தெய்வமறைச்சிறுவர்.

கோலுங் கயிறுங் கொண்டுகுழைக் குடுமி யலையக் குலவுமான்
றோலு நூலுஞ் சிறுமார்பிற் றுவள வரைக்கோவணஞ் சுடரப்
பாலும் பயனும் பெருகவரும் பசுக்கண் மேய்க்கும் பான்மையினாற்
சாலும் புல்லி னவைவேண்டுந் தனையு மிசையுந் தலைச் சென்று.

பதவுகாலங் களின்மேய்த்தும் பறித்து மளித்தும் பரிவகற்றி
யிதமுண் டுறையு நற்றண்ணீ ரூட்டியச்ச மெதிர் நீக்கி
யதர்நல் லனமுன் செலநீழ லமர்வித்தமுத மதுரப்பா
லுதவும் பொழுது பிழையாம லுடையோரில்லந் தொறுமுய்த்தார்.

மண்ணிக்கரையின் வளர்புறவின் மாடும் படுகர் மருங்கினிலுந்
தண்ணித் திலநீர் மருதத்தண்டலை சூழ்குலையின் சார்பினிலு
மெண்ணிற் பெருகு நிரைமேய்த்துச் சமிதை யுடன்மே லெரி
கொண்டு
நண்ணிக் கங்குன் முன்புகுந்து நன்னாள் பலவாமந் நாளில்.

ஆயநிரையின் குலமெல்லா மழகின் விளங்கி மிகப்பல்கி
மேய வினிய புல்லுணவும் விரும்பு புனலு மார்தலினா
லேயமனங்கொள் பெருமகிழ்ச்சி யெய்தவிரவு நன்பகலுந்
தூய தீம்பான் மடிபெருகிச் சொரிய முலைகள் சுரந்தனவால்

பூணுந் தொழில் வேள் விச்சடங்கு புரியவோம தேனுக்கள்
காணும் பொலிவின் முன்னையினு மநேக மடங்கு கறப்பனவாய்ப்
பேணுந்தகுதி யன்பாலிப் பிரமசாரி மேய்த்ததற்பின்
மாணுந்திறத்த வானவென மறையோரெல்லா மனமகிழ்ந்தார்.

அனைத்துத் திறத்து மானினங்க ளணைந்த மகிழ்ச்சி யளவின்றி
மனைக்கட் கன்று பிரிந்தாலு மருவுஞ் சிறிய மறைக்கன்று
தனைக்கண்டருகு சார்ந்துருகித் தாயாந் தன்மை நிலைமையவாய்க்
கனைத்துச் சுரந்து முலைக்கண்கள் கறவாமே பால்பொழிந்தனவால்.

தம்மை யணைந்த வான்முலைப்பா லுமே பொழியக் கண்டுவந்து
செம்மை நெறியே யுறுமனத்திற் றிருமஞ் சனமாங் குறிப்புணர்ந்தே
யெம்மை யுடைய வள்ளலாரெய்த நினைந்து தெளிந்ததனின்
மெய்மைச் சிவனார் பூசனையை விரும்பும் வேட்கை விளைந்தெழலும்.

அங்கண் முன்னை யர்ச்சனையினளவின் றொடர்ச்சி விளையாட்டாப்
பொங்கு மன்பான் மண்ணிமணற் புளினக் குறையி லாத்தியின்
செங்கண் விடையார் திருமேனி மணலாக்கிச் சிவாலயமுங் [கிழ்ச்
துங்கநீடு கோபுரமுஞ் சுற்றாலயமும் வகுத்தமைத்தார்.

ஆத்தி மலருஞ் செழுந்தளிரு முதலாவருகு வளர்புறவிற்
பூத்த மலர்கடாந் தெரிந்து புனிதர் சடிலத்திருமுடிமேற்
சாத்தலாகுந் திருப்பள்ளித் தாமம் பலவுந் தாங்கொய்து [தார்.
கோத்தவிலைப்பூங் கூடையினிற் கொணர்ந்து மணத்தங்கிடவைத்

நல்ல நவகும் பங்கள்பெற நாடிக்கொண்டு நாணற் பூங்
கொல்லையிடத்துங் குறைமறைவுமேவுங் கோக்களுடன் கூட
வொல்லை யணைந்து பாலாக்களொன்றுக் கொருகாலாக வெதிர்
செல்லவவையுங் கனைத்துமுலை தீண்டச் செழும்பால் பொழிந்தன
வால் (௫௪)

கொண்டு மடுத்தகுட நிறையக்கொணர்ந்து விரும்புங்கொள்கையினு
லண்டர் பெருமான் வெண்மணலா லயத்து ளவைமுன்றுபித்து
வண்டு மருவுந் திருப்பள்ளித் தாமங்கொண்டுவரன் முறையே
பண்டைப் பயில்வா லருசித்துப் பாலின்றிருமஞ்சனமாட்டி (௫௫)

மீள மீள விவ்வண்ணம் வெண்பால் சொரிமஞ்சனமாட்ட
வாள வுடையார் தம்முடைய வன்ப ரன்பின் பாலுளதாய்
மூளவமர்ந்த நயப்பாடு முதிர்ந்த பற்றுமுற்றச் சூழ்
கோளமதனிலுண்ணிறைந்து குறித்த பூசைகொள்கின்றார் (௫௬)

பெருமை பிறங்குஞ் சேய்ஞலூர்ப் பிள்ளையார் தம் முள்ளத்தி
லொருமை நினைவாலும் பர்பிரானுவக்கும் பூசை யுறுப்பான
திருமஞ்சனமே முதலவற்றிற்றேடாதனவன் பினிலரப்பி
வருமந்நெறியே யர்ச்சனைசெய் தருளிவணங்கி மகிழ்கின்றார் (௫௭)

இறையோனடிக்கீழ் மறையவனெடுத்துத் திருமஞ்சனமாட்டு
நிறைபூசனைக்குக் குடங்கள் பாலிரம்பச்சொரிந்து நிரைக்குலங்கள்
குறைபாடின்றி மடி பெருகக் குவிந்த முலைப்பால் குறைவின்றி
மறையோர்மனையின் முன்புதரும் வளங்கள் பொலியவைகுமால்
(௩௮)

செயலிப்படியே பலநாளுஞ் சிறந்தபூசை செய்வதற்கு
முயல்வுற்றதுவே திருவிளையாட்டாக முந்நூ லணிமார்ப
ரியல்பிற் புரியுமற்றிதனைக் கண்டித்திறத்தை யறியாத
வயன்மற்றொருவனப் பதியிலந்தணாளர்க் கறிவித்தான் (௩௯)

அச்சொற்கேட்ட வருமறையோராயனறியானென்றவற்றி
னிச்சை வழியே யான்மேய்ப்பே னென்றெம் பசுக்கடமைக்கறந்து
பொச்ச மொழுகு மாணவகன் பொல்லாங் குரைக்க வவன்றாதை
யெச்ச தத்தன் றனையழைமி னென்று ரவையிலிருந்தார்கள் (௪௰)

ஆங்கு மருங்கு நின்றார்க ளவ்வந் தணன்றன் றிருமனையின்
பாங்குசென்று மற்றவனை யழைத்துக்கொண்டு வரப்பகர்ந்த
வோங்கு சபையோ ரவனைப் பார்த்தூரா னிரைமேய்த்துன்மகன்
செய்
தீங்கு தன்னைக்கேளென்று புகுந்து பரிசு செப்புவார். (௪௧)

அந்தண் மறையோ ராகுதிக்குக் கறக்கும் பசுக்களான வெலாஞ்
சிந்தைமகிழ்ந்து பரிவினாற் றிரளக்கொடுபோய் மேய்ப்பான்போற்
கந்த மலிபூம் புனன்மண்ணி மணலிற்கறந்து பாலுகுத்து
வந்தபரிசே செய்கின்றானென்று மறையோர் வாய்மொழிந்தார் (௪௨)

மறையோர் மொழியக் கேட்டஞ்சிச் சிறுமாணவகன் செய்தவிது
விறையு நான்முன் பறிந்திலேனிதற்கு முன்பு புகுந்ததனை
நிறையும்பெருமை யந்தணர்காள் பொறுக்கவேண்டு நீங்களெனக்
குறைகொண்டிறைஞ்சி யினிப்புகுதிற் குற்றமெனதேயாமென்றான்.

அந்தணாளர் தமைவிடைகொண்டந்திதொழுது மனைபுகுந்து
வந்த பழியொன்றெனநினைந்தேமகனார் தமக்கு வாய்நேரா
லிந்தநிலைமை யறிவேனென்றிரவுகழிந்து நிரைமேய்க்க
மைந்தனார்தாம் போயினபின் மறைந்துசென்றான் மறைமுதியோன்.

சென்றமறையோன் றிருமகனார் சிறந்தவூரானிரை கொடுபோய்
மன்றன்மருவும் புறவின்கண் மேய்ப்பார்மண்ணி மணற்குறையி
லன்றுதிரளக் கொடுசென்றவதனையறிந்து மறைந்தப்பா
லின்றகுரவின் மிசையேறிநிகழ்வதறிய வொளித்திருந்தான். (௪௫)

அன்புபுரியும் பிரமசாரிகளுமூழ்கி யரனார்க்கு
முன்புபோல மணற்கோயிலாக்கி முகைமென் மலர்கொய்து
பின்புவருமான் முலைபொழிபால் பெருகுங்குடங்கள் பேணுமிடந்
தன்பாற்கொணர்ந்து தாபித்துப்பிறவும் வேண்டுவனசமைத்தார் (௪௬

நின்றவிதியின் விளையாட்டா நிறைந்த வரும்பூ சனைதொடங்கி
யொன்று முள்ளத் துண்மையினு லுடைய நாதன் றிருமுடிமேன்
மன்றல் விரவுந்திருப்பள்ளித்தாமஞ் சாத்தி மஞ்சனமா
நன்று நிறைதீம் பாற்குடங்களெடுத்து நயப்புற்றாட்டுதலும்.. (சஎ)

பரவமேன்மே லெழும்பரிவும் பழையபான்மை மிரும்பண்பும்
விரவுமேதக் கவர்தம்பான் மேவும்பெருமை வெளிப்படுப்பா
னரவமேவுஞ்சடைமுடியா ரருளாமென்னவறிவழிந்து
குரவுமேவு முதுமறையோன் கோபமேவும் படிகண்டான். (சஅ)

கண்டபோதே விரைந்திழிந்து கடிதுசென்று கைத்தண்டு
கொண்டுமகனார் திருமுதுகிற் புடைத்துக்கொடிதா மொழிகூறத்
தொண்டுபுரியுஞ் சிறியபெருந்தோன்ற லார்தம்பெருமான்மேன்
மண்டு காதலருச்சனையின் வைத்தார் மற்றென்றறிந்திலரால். (சகூ)

மேலாம்பெரியோர்பலகாலும் வெகுண்டோனடக்கவேறுணரார்
பாலார்திருமஞ்சனமாட்டும் பணியிற்சலியா ரதுகண்டு
மாலாமறையோன் மிகச்செயிர்த்துவைத்ததிருமஞ்சனக் குடப்பால்
காலாவிடறிச் சிந்தினன் கையாற்கடமைத்தலை நின்றான். (ருய)

சிந்தும் பொழுதி லதுநோக்குஞ்சிறுவரிறையிற் றீயோனைத்
தந்தையெனவே யறிந்தவன்றன்றாள்கள் சிந்துந் தகுதியினன்
முந்தைமருங்குகிடந்த கோலெடுத்தார்க்கதுவே முறைமையினல்
வந்துமழுவா யிடவெறிந்தார்மண்மேல் வீழ்ந்தான் மறையோனும்.

எறிந்த வதுவே யர்ச்சனையிலிடையூறகற்றும் படையாக
மறிந்ததாதை யிருதாளுந்துணித்த மைந்தர்பூசனையி
லறிந்த விடையூறகற்றினராய் முன்போ லருச்சித் திடப்புகலுஞ்
செறிந்த சடைநீண் முடியாருந்தேவியோடும் விடையேறி. (ருஉ)

பூத கணங்கள்புடைசூழப் புராணமுனிவர் புத்தேளிர்
வேதமொழிகளெடுத்தேத்த விமல மூர்த்தி திருவுள்ளங்
காதல்கூர வெளிப்படலுங் கண்டுதொழுது மனங்களித்துப்
பாதமலர்கண் மேல்விழுந்தார் பத்தி முதிர்ந்த பாலகனார். (ருக)

தொடுத்தவிதழி சூழ்சடையார் துணைத்தாணிழற்கீழ் விழுந்தவரை
யெடுத்துநோக்கி நம்பொருட்டாலீன்ற தாதைவிழ வெறிந்தா
யடுத்ததாதை யினியுனக்கு நாமென்றருள் செய்தணைத்தருளி
மடுத்தகருணை யாற்றடவி யுச்சிமோந்து மகிழ்ந்தருள. (ருச)

செங்கண்விடையார் திருமலர்க்கை தீண்டப்பெற்றசிறுவனு
ரங்கண் மாயையாக்கையின்மேலளவின் றுயர்ந்த சிவமயமாய்ப்
பொங்கியெழுந்த திருவருளின்மூழ்கிப் பூமேலயன் முதலாந்
துங்கவமரர் துதிசெய்யச் சூழ்ந்தவொளியிற்றோன்றினார். (ருரு)

அண்டர்பிரானுந் தொண்டர்தமக்கதிபனுக்கி யனைத்துநா
முண்டகலமு முடுப்பனவுஞ் சூடுவனவு முனக்காகச்
சண்டீசனுமாம் பதந்தந்தோமென்றங் கவர்பொற்றடமுடிக்குத்
துண்டமதிசேர் சடைக்கொன்றை மாலைவாங்கிச் சூட்டினர். (ருசு)

எல்லாவுலகு மார்ப்பெடுப்ப வெங்குமலர்மா ரிகள்பொழியப்
பல்லாயிரவர்கணநாதர் பாடியாடிக் களிபயிலச்
சொல்லார்மறைகடுதி செய்யச்சூழ்பல் லியங்களெழுச்சைவ
நல்லாரேங்க நாயகமா நங்கள் பெருமான் ருெழுதணைந்தார். (ருஎ)

ஞாலம்மறியப் பிழைபுரிந்து நம்பரருளா னன்மறையின்
சீலந்திகழுஞ் சேய்ஞலூர்ப் பிள்ளையார்தந்திருக்கைபிற்
கோல மழுவாலேறுண்டுகுற்ற நீங்கிச்சுற்றமுடன்
மூலமுதல்வர் சிவலோகமெய்தப்பெற்ருன் முதுமறையோன். (ருஅ)

வந்துமிகைசெய் தாதைதாண் மழுவாற்றுணித்தமறைச்சிறுவ
ரந்தவுடம்புதன்னுடனேயரனார் மகனாராயி
ரிந்தநிலைமையறிந்தாரா ரீறிலாதார்தமக்கன்பு
தந்தவடியார் செய்தனவே தவமாமன்றே சாற்றுங்கால். (ருகூ)

நேச நிறைந்தவுள்ளத்தானீல நிறைந்த மணிகண்டத்
தீசனடியார் பெருமையினையெல்லாவுயிருந் தொழவெடுத்துத்
தேசமுய்யத் திருத்தொண்டத்தொகைமுன் பணித்ததிருவாளன்
வாசமலர்மென் கழல்வணங்க வந்தபிறப்பை வணங்குவாம். (சூ௰)

சண்டேசுர நாயனர் புராணம் முற்றிற்று.

குலமே றியசேய் ஞலூரிற் குரிசில் குரைகடல்சூழ்
தலமே றியவிறற் றண்டிகண் டீர்தந்தை தாளிரண்டும்
வலமே றியமழு வாலெறிந் தீசன் மணிமுடிமே
னலமே றியபால் சொரிந்தலர் சூட்டிய நன்னிதியே.

வேதமலி சேய்ஞலூ ரெச்ச தத்தன்
விளங்கியசேய் மறைப்பிலும் விசார சருமர்
கோதனமேய்ப் பவன்கொடுமை பொருது தாமே
கொண்டுநிரை மண்ணியின்றென் கரையி னீழற்
ருதகிபின் மணலிலிங்கத் தான்பா லாட்டத்
தாதைபொரு தவைபிடறுந் தாள்கண் மாளக்
காதிமலர்த் தாமமுயர் நாம முண்ட
கலமகனும் பதமருளாற் கைக்கொண் டாரே.

திருச்சிற்றம்பலம்

சீர்நிலவு திருக்குறிப்புத் தொண்டர்திருத் தொழில்போற்றிப்
பார்குலவத் தந்தைதா ளறவெறிந்தார் பரிசுரைக்கேன்
பேரருளின் மெய்த்தொண்டர் பித்தனெனப் பிதற்றுதலா
லாருலகி லிதனுண்மை யறிந்துரைக்க விசைந்தெழுவார்.

அட்டவீரட்டம்.

பூமன் சிரங்கண்டி யந்தகன் கோவல் புரமதிகை
மாமன் பறியல் சலந்தரன் விற்குடி மாவழுவூர்
காமன் குறுக்கை யமன்கட வூரிந்தக் காசினியிற்
றேமன்னு கொன்றையுந் திங்களுஞ் சூடிதன் சேவகமே.

க. திருக்கண்டியூர் - பிரமனது சிரங்கொய்த தலம்.
உ. திருக்கோவலூர் - அந்தகாசுரனைக் கொன்ற தலம்.
ஙா. திருவதிகை - திரிபுரத்தையெரித்த தலம்.
ச. திருப்பறியலூர் - தக்கன்சிரத்தைத் தடிந்த தலம்.
ரு. திருவிற்குடி - சலந்தரனைத் தலையறிந்த தலம்.
சா. திருவழுவூர் - யானையையுரித்த தலம்.
எ. திருக்குறுக்கை - மன்மதனையெரித்த தலம்.
அ. திருக்கடவூர் - இயமனையுதைத்த தலம்.




The Peerless Press, Madras.